Regd M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு



மலர் 28 | மன்மத ஐப்பசி 1955 அக்டோபர் | இதழ் 10

## திருமூலர்

பத்திராசிரியர்

பன்னிரு திருமுறை யாசிரியர்களுள் ஒருவர் திருமூல நாயனார். இவர் அருளிய " திருமந்திரம் " 3000 பாடல்களை யுடையது. இந்த நூல் சைவசித்தாந்தக் கருத்துக்கள் பற்பலவற்றைத் தெளிவாகக் கூறும் சிறப்புடையது. அஷ்டாங்கயோக நுட்பங்களை விளக்கும் உயர்வுடையது. வழிபாட்டில் சக்கரங்களைத் தாபனம் செய்து தியானம் செய்யும் முறைகளை விரிவாக எடுத்துரைப்பது. திருமந்திரத்துள் சொல்லப்படாத பொருள் இல்லை யென்றுகூட சொல்லிவிடலாம்.

திருமூலர் காலத்தைப் பற்றிப் பலவகையான ஆராய்ச்சி, பல பேரறிஞர்களால் நடத்தப்பெற்றது. முடிவாக அவர் கி. மு. 150 முதல் கி. பி. 850 என்ற கால வரையறையைச் சேர்ந்தவர் என்ற முடிபு காணப்பட்டது. திருமூலர் வரலாற்றை மிக அழகாகச் சேக்கிழார் சுவாமிகள் கூறுகிறார் திருக்கயிலாயத்திலிருந்த ஒரு சித்தர் பொதிகையிலுள்ள அகத்தியரைக் காண, ஆகாய வழியாக வரும்போது, சாத்தனூருக்கருகில் பல பசுக்கள், மேய்க்கின்ற மூலன் உடலைச்சுற்றிக் கதறி அழுவதைக் கண்டார் இரக்கமே உருக்கொண்ட சித்தர், தமது உடலை ஓரிடத்தில் சேமித்து வைத்துவிட்டு, தமது உயிரை அந்த மூலன் உடலுள் புகுத்தி, தூங்கி எழுவதுபோல் எழுந்தார்.

மற்ருேரிடத்தில் "இல்லக விளக்கது இருள் கெடுப்பது நல்லக விளக்கது நமச்சிவாயவே" என்று கூறுகிருர். அண்ணுமலை ஒளியைச் சிவப்பிரகாசர் "கண்டவர் அகத்திருள் அனைத்தையும் நீக்கும் சோணசைலனே" என்று கூறுகிருர்.

இவ்வாறே திருமாலடியார்களாகிய ஆழ்வார்களும் அகல் விளக்கைப் போலவே அக விளக்காகிய ஞான விளக்கையும் ஏற்றி வைக்கிருர்கள். பூதத்தாழ்வார் "அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக, இன்புருகு சிந்தை இடுதிரியா-நன்புருகி ஞானச்சுடர்விளக் கேற்றினேன்" என்கிருர். மற்ருெருவர் பொய்கையாழ்வார் "வையம் தகளியா, வார்கடலே நெய்யாக, வெய்ய கதிரோன் விளக்காக, செய்ய சுடராழியா னடிக்கே சூட்டினேன் சொன்மாலை" என்று பாடுகிருர்.

புதுமையான நாகரிகச் சூழ்நிலையில் மின் விளக்கின் நடுவில் வாழ்ந்துவரும் இக்காலத்தில் அகல் விளக்கின் தன்மைகளையறிந்து அக விளக்கை ஏற்றி வழிபட முயலுவோமாக.

---

# கோமதி அந்தாதி

அம்பை – சங்கரனுர்

அமிழ்தினுமினிய நம் தமிழ்மொழியில் சிறுநூல் வகைகள் 96 வகைப்படும். (பிரபந்தங்கள் என்பர் வடநூலார்) அவற்றுள் அந்தாதி என்பதும் ஒன்று. பழங் காலத்தில் நம் தமிழ்ப்பெரியார்கள் தமிழ் போதிக்கும் வரிசையில் அந்தாதிக்கும் தக்க இடங்கொடுத்து மாணவர் களுக்குப் போதித்து வந்தனர். அதனுல் அங்கங்குள்ள தலங்களின் பெருமைகளைப்பற்றிப் பல பெரியோர்கள் அந்தாதி நூல்கள் பாட முற்பட்டனர். அவைகளில் தலையாயவை அருணகிரியந்தாதி, திருவேங்கடத்தந்தாதி, திருப்புகலூரந்தாதி, சங்கர நயினுர் கோயிலந்தாதி முதலியனவாம்.

இவைகளைப் போன்றே கோமதியந்தாதி என்ற நூலும் தோன்றியது. இது பாண்டிநாட்டிலுள்ள சங்கர நயினுர் கோவிலில் அருட் சத்தியை மக்களுக்குப் பாலித்துக்கொண்

டிருக்கும் கோமதியம்மையைப்பற்றிப் பாடப்பெற்றது. இத்தலத்திலுள்ள பெருமானுக்குக் கூழைப்பிரான், சங்கரர், சிவசங்கரேசர், சங்கரநாராயணர், சங்கரலிங்கர், ஆவுடை நாயகர் முதலிய பல பெயர்களுண்டு. அம்பிகைக்கு ஆவுடை, ஆவுடைநாயகி, ஆவுடைத்தோகை, ஆவுடைமாது, ஆவுடையாள், கோமதி முதலிய பெயர்கள் வழங்குகின்றன. ஆவுடை என்ற தமிழ்ப் பெயரையே கோமதி என்று வடமொழியில் வழங்குகின்றனர். ஆ எனினும் கோ எனினும் பசுவைக் குறிக்கும். உலகிலுள்ள பசுக்களாகிய ஆன்மாக்களுக்குத் தாயானவள். ஆதலின் அவ்வம்மையை ஆவுடையாள், கோமதி என்ற பெயர்களால் ஆன்றோர் அழைத்தனர்.

பாண்டி நாட்டிலுள்ள பஞ்சபூதத்தலங்களுள் இச் சங்கர நயினர் கோயில் பிருதிவி தலமாகும். சிவபெருமானுக்குரிய 64 உருவங்களுள் சங்கரநாராயண உருவம் இத்தலத்திலேயே உள்ளது. இக்கோயிலில் சங்கரேச்சுரர் சந்நிதி, கோமதியம்மை சந்நிதி, சங்கர நாராயணர் சந்நிதி என்ற முப்பெருஞ் சந்நிதிகளுள. இம்மூன்று சந்நிதிகளிலும் மிகவும் பெருமை பெற்று விளங்குவது கோமதியம்மையின் சந்நிதியே யாகும். அதனாலேயே இன்றும் கோமதித் தாயின் சந்நிதியில் பேயாலும் நோயாலும் நலிவுற்றோர்கள் கூடி அவ்வம்மையை வாழ்த்தி வணங்கி அவளருள் பெற்று நோயினீங்கிச் செல்கின்றனர்.

பன்னிரண்டாண்டுகட்கு முன்னர் யான் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள அம்பா சமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியரா யிருந்தேன். அப்போது ஒருநாள் காலையில் ஒரு பெரியார் எங்கள் வீட்டுக்கு வந்தார். அவர் அம்பைக்கு அருகிலுள்ள இடகால் என்ற ஊரிலுள்ளவர். பரம்பரையாகவே தமிழில் ஆழ்ந்த புலமை மிக்க கால்வழியில் தோன்றியவர். குமாரசாமிப் புலவர் என்ற பெயரினர். அப்பெரியாருடைய தொடர்பு பின்னர் பல நாட்களும் எனக்குக் கிடைத்தது. ஒருநாள் அப்பெரியாருடன் நான் பல செய்திகளைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது ஓலைச்சுவடிகளைப்பற்றிய பேச்சும் வந்தது. அப்பொழுது "என்னிடம் சில சுவடிகள் உள்ளன" என்று அவற்றைக் கொண்டு வந்தார். அவை

களில் பல, சிறந்த நூல்களே. அவைகளில் ஒன்றில் "கோமதியந்தாதி, அண்ணாமலை இரட்டியார் இயற்றியது" என்று எழுதப்பட்டிருந்தது. அதைக் கண்டதும் அப்பெரியாரின் துணைகொண்டே அன்று முதலே அச்சுவடியை ஒரு குறிப்பேட்டில் பெயர்த்தெழுத முற்பட்டேன். பெரும்பாலும் அந்தாதிகள் நூறு செய்யுட்களைக் கொண்டிலங்குவது வழக்கம். அதே போன்று இந்நூலும் நூறு பாட்டுக்களைத்தான் பெற்றிருக்க வேண்டும். அப்படியிருக்க நம் துரதிர்ஷ்டவசத்தால் அவ்வேட்டுச் சுவடியில் 44 பாட்டுக்களே யிருந்தன. அவைகளை அப்படியே பிரதி செய்து கொண்டு எஞ்சிய பகுதி யாண்டாவது கிடைக்க இயலும் எனப் பல்லிடத்தும் விசாரிக்க முற்பட்டேன். அது கிடைத்தற்கில்லை. இனியும் கிடைக்கக் கூடும் என்ற நம்பிக்கை கொண்டே நம் சித்தாந்த இதழ் வாயிலாக இச்செய்தியை வெளியிடலானேன். எஞ்சிய பகுதியை யாராவது கண்டோ அல்லது கேட்டோ இருக்கின் தயை கூர்ந்து தெரிவித்தருளின் முழுவதும் சேர்த்து வெளியிட்டுத் தமிழுலகுக்குப் பயன்படச் செய்யலாம்.

கோமதியந்தாதியி லுள்ள சில பாடல்கள் வருமாறு:—

௨. நான்புரி யேன்கொடும் பாவமல்லா வினை
நாளுங் கொலை
நோன்புரி யேன்துய ருந்தவிர்த் தாண்டதை
நோக் குறுங்கால்
வான்புரி யேன்? மலர்ப் புன்னைமின் யாரையும்
வாழ்வித் தல்பொய்
ஏன்? புரி யேன்? கதை யேன்? பக
டேன்? நா சேனமனே.

14. புராதனி யம்ப ணிலகர் தரிபுன்னைப் பொன்னெஞ்சகம்
ஓராதனி யம்பணி யஞ்சடை யார்பங்கி லுத்தமியே
இராதனி யம்பணி சுற்றுச ரீரமென் றெண்ணித்தொழ
வராதனி யம்பணி நிற்பார்க்கென ரேகதி வாய்ப்பதுவே.

16. பேதைய ராவலை மாற்றேம் அவர்தம் பெருந்திறம்ப
வாதைய ராவலைக் கத்தளர்ந் தேங்கன்றின் வாளைமுட்ட
ஓதைய ராவலைப் பால்சாய்க்கும் புன்னைமின்! வாழ்வன்கருந்
தாதைய ராவலை யென்றால் அருளாத தாலுய்யமே.